உ

சிவமயம்

# சிவாலய உற்சவங்களும் பவித்ரோற்சவ விளக்கமும்



வெளியிடுவோர்:

புதுவை, ஸ்ரீ வேதபுரீசுவரர் ஸ்ரீ வரதராஜப் பெருமாள்
தேவஸ்தான அறங்காவலர்கள்.

1964.

உ

சிவமயம்

# சிவாலய உற்சவங்களும் பவித்ரோற்சவ விளக்கமும்

எழுதியவர் :

"சித்தாந்த வித்தகர்"

கயப்பாக்கம்.

திரு. சோமசுந்தரம் செட்டியார் அவர்கள், சென்னை.




வெளியிடுவோர் :

புதுவை, ஸ்ரீ வேதபுரீசுவரர் ஸ்ரீ வரதராஜப் பெருமாள் தேவஸ்தான அறங்காவலர்கள்.

1964.

27-5

உ

# அணிந்துரை

திருவாளர். அ. உத்தண்டராம பிள்ளை, B.A., B.L., I.A.S. அவர்கள், சென்னை.

(முன்னாள் அறநிலைய ஆணையர்)

அன்புடன் அளித்தது

"ஆற்றரு நோய்மிக் கவனி மழையின்றிப்
போற்றரு மன்னரும் போர்வலி குன்றுவர்
கூற்றுதைத் தான்திருக் கோயில்க ளெல்லாம்
சாற்றிய பூசைகள் தப்பிடில் தானே"

"முன்னவனார் கோயில் பூசைகள் முட்டிடின்
மன்னர்க்குத் தீங்குள வாரி வளங்குன்றும்
கன்னங் களவு மிகுத்திடும் காசினி
என்னரு நந்தி எடுத்துரைத் தானே"

—திருமூலர் திருமந்திரம்.

அங்கிங் கெனாதபடி எங்கும் பிரகாசமாய் ஆனந்த பூர்த்தியாகி அருளொடு நிறைந்த பரம்பொருளை வழிபடுவதற்காக நம் முன்னோர் எல்லா ஊர்களிலும் திருக்கோயில்கள் அமைத்துள்ளனர். தமிழகத்திலே தான் திருக்கோயில்கள் மிகுதி. நமது கோயில்களிலே தான் மூர்த்திகளும் வழிபடும் முறைகளும் அதிகம். நம் நாகரிகமே திருக்கோயில் நாகரிகம். கோயில்களில் நித்திய நைமித்திக பூசைகளும் விழாக்களும் முறையாக நடைபெற வேண்டிய அவசியத்தை மேலே குறிப்பிட்டுள்ள திருமந்திரப் பாடல்கள் நன்கு வலியுறுத்துகின்றன.

மண்ணினிற் பிறந்தார் கண்ணினுல் பெறும்பயன் மதிசூடும் அண்ணலார் நல்விழாப்பொலிவு கண்டார் தல் உண்மையா மெனில் உலகர்முன் வருக என்று திருஞானசம்பந்தப் பெருமான் அருளியதும் எலும்பு பெண்ணுன வரலாறு யாவரும் அறிந்ததே. திருக்கோயில்களில் நடைபெறும் திருவிழாக்களில் மக்கள் ஏராளமாகப் பங்கெடுத்துக்கொண்டு இறைவன் திருவருளேப் பெறுகின்ருர்கள். எனினும், நம்மிற் பெரும்பாலோர்க்கு, இத்திருவிழாக்களின் உண்மைத் தத்துவங்களோ, பயன்களோ தெரியாது என்பதை உணர்ந்த புதுவை ஸ்ரீவேதபுரீசுவரர் ஸ்ரீ வரதராஜப் பெருமாள் தேவஸ்தான அறங்காவலர்கள் வேண்டு கோளுக் கிணங்கச் "சித்தாந்த வித்தகர்" கயப்பாக்கம். திரு. சோமசுந்தரம் செட்டியாரவர்கள் "சிவாலய உற்சவங்களும் பவித்ரோற்சவ விளக்கமும்" என்ற இவ்வரிய நூலே எளிய இனிய நடையில் எழுதியுள்ளனர். இத்தகைய பல அரிய நூல்களே வெளியிட்டுச் சைவத்துக்கும் தமிழுக்கும் அருந்தொண்டு ஆற்றிவரும் செட்டியாரவர்களுக்குத் தமிழகம் மிகவும் கடமைப்பட்டுள்ளது.

மூவாயிரத்துக்கும் மேற்பட்ட பாடல்களில் அந்தி மதிபுனே அரனடி நாள்தொறும் சிந்தைசெய்து ஆகமம் செப்பலுற்ற திருமூலரே,

"ஆர்அறிவார் எங்கள் அண்ணல் பெருமையை
ஆர்அறிவார் இந்த அகலமும் நீளமும்
பேர்அறி யாத பெருஞ்சுடர் ஒன்றுஅதின்
வேரறி யாமை விளம்புகின் றேனே"

என்று சொல்வாராஞல் ஆகம உண்மைகளே நாம் எளிதில் புரிந்துகொள்ள முடியுமா? ஆயினும் ஒன்றும் புரியாமல் திருவிழாக்களே நடத்தியும் திருவிழாக்களில் கலந்துகொண்டும் இறைவனே வழிபடுவதைவிட அவ்விழாக்களின் தத்துவங்களேத் தெரிந்துகொண்டு இவ்விழாக்களில் பங்குகொள்வோமாஞல் நாம் பெரிதும்

பயன்பெறுவோமாதலால் இந்நூல் மக்களுக்கு மிகவும் நன்மை பயக்குமென்று நம்புகிறேன். இத்தகைய நூல்கள் தற்காலத்தில் மிகமிக அவசியம். ஆகவே, இந்நூலை வெளியிட முன்வந்த ஷை தேவஸ்தான அறங்காவலர்களுக்கும், செட்டியாரவர்களுக்கும் எல்லா நலங்களையும் அருளவேண்டுமாய் எல்லாம் வல்ல இறைவன் திருவடியை வாழ்த்தி வணங்குகின்றேன்.

''தென்னாடுடைய சிவனே போற்றி !
எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி''

''வைய நீடுக மாமழை மன்னுக
மெய் விரும்பிய அன்பர் விளங்குக
சைவ நன்னெறி தாந்தழைத் தோங்குக
தெய்வ வெண்திரு நீறு சிறக்கவே.''

அ. உ.



உ
சிவமயம்

# முகவுரை

எப்போ தகத்து நினைவார்க் கிடரில்லை
கைப்போ தகத்தின் கழல்.

அநாதி மலமுத்தரான சிவபெருமான் அநாதி மல பெத்தரான உயிர்த் தொகைகள் உய்யும் பொருட்டுத் தனக்கென ஒரு திருமேனி, ஒரு திருநாமம் ஒன்றும் இல்லாதவனுயினும், ஞானமயமான ஒரு திருமேனியைத் தன்னிச்சையினுல் தாங்கி, ஒரு திருநாமத்துடன் ஆங்காங்கு திருக்கோயில்களில் எழுந்தருளியிருப்பது கண்கூடு. இத்தகைய பல திருக்கோயில்களுள் புதுவை, மகாத்மா காந்தி ரோட்டிலுள்ள ஸ்ரீவேதபுரீசுவரர் ஸ்ரீவரதராஜப் பெருமாள் திருக்கோயிலும் ஒன்று. அங்கு நாளது சோபகிருது ஆண்டு ஆவணித்திங்களில் சிவாகம முறைப்படி வெகு சிறப்பாக 3 நாட்கள் பவித்ரோற்சவம் நடைபெற்றது. ஏராளமான பக்தர்கள் வந்து தரிசித்துப் பெருமான் திருருவளைப் பெற்றனர். அவர்களுள் அடியேனும் ஒருவன். அத்திருவிழா மிகச் சிறப்புடன் நடைபெற்றது. அதற்கங்கமாகப் பல சமயச் சொற்பொழிவுகளும் நிகழ்ந்தன. இவ்விழா மிகச் சிறந்த முறையில் நடைபெறத் துணைபுரிந்தவர்களுள் தலையாயவர்கள் ஷை தேவஸ்தான சிவாசாரிய சுவாமிகளும், திருக்கழுக்குன்றம் சிவஸ்ரீ சந்திரசேகர சிவாசாரிய சுவாமிகளும், மணக்குள விநாயகர் ஆலய ஸ்தானீகம் சிவஸ்ரீ உ. நா. மணி குருக்களும் ஆவார்கள். இது மிகையன்று.

அதுகாலை ஷை தேவஸ்தான அறங்காவலர்களுள் ஒருவரும், என் மதிப்பிற்குரிய நண்பரும், பிரபல நூல்

வியாபாரியும், Esso ஆயில் கம்பெனி ஏஜெண்டும், நல்லொழுக்கமுடையவருமான திருவாளர். K. குப்பு சாமி முதலியார் அவர்களும், அவரது உறவினரும், புதுவைப் புரவலரும், கல்வி, கேள்வி, அறிவு, அடக்கம் முதலியவற்றிற் சிறந்து விளங்குபவருமான திருவாளர். அ. சேனுபதி முதலியார் அவர்களும் அடியேனையும் ஒரு பொருளாக எண்ணிப் பலர்க்கும் பயன்படும் வகை யில் பவித்ரோற்சவத்தின் விளக்கத்தைத் தெளிவு படுத்தி ஒரு சிறுநூல் வடிவில் எழுதித் தருமாறு பணித்தார்கள். ஒரு தகுதியுமில்லாத அடியேனும் "ஆசை வெட்க மறியாது" என்ற பழமொழிக்கிணங்க இசைந்து வந்தேன்.

இவ்விழாவின் விளக்கம் பற்றிய குறிப்புக்களைப் பல சிவாசாரியர்கள்பால் அணுகிக் கேட்டுக்கொண் டேன். இவர்களுள் இருபெரு மக்கள் குறிப்பிடத் தக்கவர்கள். அவர்கள் புதுச்சேரி மணக்குள விநாயகர் ஆலய ஸ்தானீகம் சிவஸ்ரீ உ. நா. மணி குருக்கள் அவர்களும், சென்னை ஸ்ரீகபாலீசுவரர் தேவஸ்தான அர்ச்சகர்களுள் ஒருவரும், சிவாகம சாஸ்திர விற்பன்ன ரும், கல்வி, கேள்வி, அறிவு, அடக்கம், ஒழுக்கம் முதலிய நற்குணங்களை உடையவருமான சிவஸ்ரீ ம. சுவாமிநாத சிவாசாரிய சுவாமிகளும் ஆவார்கள். இவர்கள் தெரிவித்த குறிப்புக்களையும் ஏற்றுக்கொண்டு இறைவன் உண்ணின்று உணர்த்த உணர்ந்த குறிப்புக் களையும் சேர்த்து எழுதி இச்சிறு நூலை வெளியிடு கின்றேன். அன்பர்கள் இதனைப் பெற்றுப் படித்துப் பெருமான் திருவருளைப் பெற்றுய்வார்களாக!

இந்நூல் வெளிவருவதற்குக் காரணராக உள்ள புதுவை ஸ்ரீ வேதபுரீசுவரர், ஸ்ரீ வரதராஜப்பெருமாள் தேவஸ்தான அறங்காவலர்கள் அவர்களுக்கும், பல நல்ல கருத்துக்களை அடியேனுக்கு உணர்த்தியருளிய சிவாசாரியப் பெருமக்களுக்கும், இச் சிறுநூலை அணி

செய்வதற்காக ஒரு அணிந்துரை தந்துதவிய உயர்திரு. அ. உத்தண்டராம பிள்ளை, B.A., B.L., I.A.S. அவர்களுக்கும், இது அழகுடன் வெளிவர உதவிய பாரி அச்சகத்தாருக்கும் என் நன்றி உரித்தாகுக! இந் நூலிற் காணும் குறைபாடுகளை அன்பர்கள் தெரிவிப்பார்களாயின் அவற்றை இரண்டாம் பதிப்பில் திருத்தி அமைத்துக்கொள்ள இயலும். வாழ்க சைவம்! வாழ்க தேவஸ்தான அறங்காவலர்கள்!! வாழ்க சீரடியாரெல்லாம்!!!

சென்னை—5,
30-'12-'63.

இங்ஙனம்,
கயப்பாக்கம். **சோமசுந்தரம்.**



உ

சிவமயம்

# நூல்

## திருஞானசம்பந்த சுவாமிகள்

பண் - சீகாமரம்—2-ந் திருமுறை

திருச்சிற்றம்பலம்

உரிஞ்சாய வாழ்க்கை அமணுடையைப் போர்க்கும்
இருஞ்சாக் கியர்கள் எடுத்துரைப்ப நாட்டில்
கருஞ்சோலை சூழ்ந்த கபாலீச் சரமமர்ந்தான்
பெருஞ்சாந்தி காணுதே போதியோ பூம்பாவாய்!

திருச்சிற்றம்பலம்

## உற்சவ வகைகள்

**நித்தியம்:**

உற்சவம் என்ருலும், திருவிழா என்ருலும்ஒன்றே. இது பலவகைப்படும். முக்கியமாக இவை இருவகை என்பர் ஆன்ருேர். [ஒன்று நித்தியம், மற்ருென்று, நைமித்திகம் ஆகும்.]

திருக்குறள் - வான்சிறப்பு—8-ம் குறள்

"சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானேர்க்கு மீண்டு"

"(இ - ள்.) வானேர்க்கும் ஈண்டுச் சிறப்பொடு பூசனை செல்லாது = தேவர்கட்கும், இவ்வுலகின்கண் மக்களால் செய்யப்படும் விழவொடு கூடிய பூசனையும் நடவாது; வானம் வறக்குமேல் = மழை பெய்யா தாயின். (எ - று.)

நைமித்திகத்தோடு கூடிய நித்தியமாகலின் செல்லாது என்ருர். நித்தியத்தில் தாழ்வு தீரச் செய்வது நைமித்திகம் ஆதலின் அதனை முற்கூறினர். (நைமித்திகம் நிமித்தத்தாலாவது) என்பர் பரிமேலழகர்.

எல்லாச் சிவாலயங்களிலும் தினந்தோறும் நடைபெறும் பூசை நித்திய பூசை எனப்படும். அந்தந்த ஆலயங்களின் வருவாய்க்குத் தகுந்தபடி ஒரே கால பூசையும், இருகால பூசையும், நான்கு கால பூசையும், சில ஆலயங்களில் ஆறுகால பூசையும் நடைபெற்று வருவது அன்பர்களுக்குத் தெரியும். ஆயினும் நான்கு கால பூசைகளாவது நடைபெற வேண்டுமென ஆகமங்களில் கூறப்பட்டுள்ளது என்பர் அந்நூலை உணர்ந்தவர்கள். அவையாவன:

1. காலைசந்தி; 2. உச்சிக்காலம்; 3. சாயங்காலம்; 4. அர்த்தஜாமம், இவற்றின் காலங்கள் அந்தந்த ஆலயங்களின் நிர்வாகத்தின்படி அமைத்துக் கொள்ளப்பெறும்.

நைமித்திகம்: (காரணம் பற்றி வருவது).

(i) பஞ்சபர்வ உற்சவம்: இது மாச உற்சவம் என்றும் சொல்லப்பெறும்.

இதன் விபரம்: ஒரு சாரார் 1. மாதப்பிறப்பு; 2. பௌர்ணமி; 3. அமாவாசை; 4. கிருத்திகை; 5. பிரதோஷம்; என்பர். மற்ருெரு சாரார் 1. பௌர்ணமி; 2. அமாவாசை; 3. கிருத்திகை; 4. வளர்பிறைத்திரயோதசியில் வரும் பிரதோஷம்; 5. தேய்பிறைத் திரயோதசியில் வரும் பிரதோஷம் என்பர். இன்னும் ஒரு சாரார் 1. அஷ்டமி; 2. கிருஷ்ண பட்ச சதுர்த்தசி; 3. அமாவாசை; 4. பௌர்ணமி; 5. மாதப்பிறப்பு என்பர்.

கடைசியாகச் சொன்ன பஞ்சபர்வ உற்சவம் தான் இவ்வாலயத்தில் நடைபெற்று வருகிறது. [விசேடக் குறிப்புக்களை அநுபந்தத்தில் காண்க].

(ii) பிரம்மோற்சவம்: இது பெரிய உற்சவம் அல்லது பெருவிழா எனப்பெறும். இது மிகச் சிறப்பாக ஒவ்வொரு சிவாலயத்திலும் ஒவ்வொரு மாதத்தில் நடந்து வருவதை அனைவரும் அறிவர். இது சில சிவாலயங்களில் சித்திரை, வைகாசி, ஆனி, கார்த்திகை மாதங்களிலும், சில ஆலயங்களில் தை, மாசி, பங்குனி மாதங்களிலும் இவ்விழா நடை பெறுகிறது. பெரும்பாலும் தேவர்களுக்குப் பகல் காலம் எனப்படும் உத்தராயணத்தில் வரும் தை மாதம் முதல் ஆனி மாதம் வரையுள்ள மாதங்களில் தான் பல ஆலயங்களில் இவ்விழா நடை பெறுகிறது.

இப்பெருவிழா சில ஆலயங்களில் 10 நாட்களிலும், வேறு சில ஆலயங்களில் 12, 13, 15, 17, 19, 21 நாட்களிலும் கொண்டாடப் பெற்று வருகிறது. சில ஆலயங்களில் பௌர்ணமி அந்தமாகவும், சில ஆலயங்களில் நக்ஷத்திர அந்தமாகவும் தீர்த்த வாரியுடன் நிறை வெய்தும்.

இப்பெருவிழா இறைவனது பஞ்ச கிருத்தியத்தைக் (ஐந்தொழில்) குறிப்பதாக நிகழும். பெரும்பாலும் 10 நாட்களில் நிகழ்கின்ற இப்பெரு விழாவின் தத்துவம் இனிது விளங்கும். முதல் நாள் அன்று பெருமான் அன்னவாகனத்தில் எழுந்தருளி வருவது மரபு. இது பிரம தேவனுடையது ஆதலால் முதல் மூன்று நாள் உற்சவங்களும் சிவபெருமான் சிருஷ்டிகர்த்தாவாகிய பிரமதேவனிடம் அதிட்டித்து நின்று சிருஷ்டித் தொழிலைச் (படைத்தலை) செய்கின்றான் என்பதை விளக்கும். நான்காவது நாளில் பெருமான் நாக வாகனத்தில் எழுந்தருளி வருவது மரபு. இது திருமாலின் வாகன மாதலால் 4, 5, 6 ஆகிய விழாக்களும் சிவபெரு

மான் திதிக்கர்த்தாவாகிய திருமாலிடம் அதிட்டித்து நின்று திதித் தொழிலை (காத்தலை) நிகழ்த்துகின்றான் என்பதை விளக்கும். 7-வது நாளன்று பெருமான் இரதத்திலும் 8-வது நாளன்று குதிரை வாகனத்திலும் எழுந்தருளுவது மரபு. இது பெருமான் சம்மார கர்த்தாவாகிய ருத்ரமூர்த்தியிடம் அதிட்டித்து நின்று சம்மாரத் தொழிலை (அழித்தலை) நிகழ்த்துகின்றான் என்பதைக் காட்டும். ஒன்பதாம் நாளில் ஆண்டவன் பிக்ஷாடனராக எழுந்தருளி வருவது, பெருமான் தாருகாவனத்து ரிஷி பத்தினிகளது செருக்கை (அவர் அறிவை மயக்கி) அடக்கியதைக் குறிக்கும். மறைத்தல் சக்தி கருநிறமாதலால், பெருமானும் கரிய பட்டு நூல்களையும், கரிய புட்பமாலையையும் அணிந்து வருவான். இது மறைத்தல் சக்தி கருநிறமானது என்றும் மயக்கும் தன்மையுடைய தென்றும், இவ்விழா (மறைத்தலை) திரோதானம் என்னும் நான்காவது தொழிலை இறைவன் நிகழ்த்துகிறான் என்பதைக் குறிக்கும். இனி கடைசி நாளாகிய பத்தாவது நாள் அன்று பெருமான் சப்பரத்தில் எழுந்தருளி வந்து தீர்த்தமாடி உயிர்களுக்கு அருள்புரிகின்றான் என்பது அநுக்ரக தொழிலைக் (அருளலை) குறிக்கும். [சிவக்ஷேத்ராலய மஹோற்சவ உண்மை விளக்கம் என்னும் நூலில் கண்டது].

இவையன்றிச் சிவாலயங்களில் வேறுபல உற்சவங்களு முண்டு. சில சிவாகம சம்பந்தமாகவும், சில பௌராணிக சம்பந்தமாகவும் நிகழும். இவற்றுள் சிலவற்றை மட்டும் இங்கு குறிப்பிடலாம்.

1. விநாயகர் சதுர்த்தி விழா; 2. முருகப் பெருமான் கார்த்திகை, சஷ்டி விழா; 3. தேவி ஆடிப்பூர உற்சவம்; 4. தேவி நவராத்திரி உற்சவம்; 5. அன்னுபிஷேக உற்சவம்; 6. தெப்போற்சவம்; 7. வசந்தோற்சவம்; 8. வி‍ ாய் ஆற்றி உற்சவம்; 9. மெத்தை

உற்சவம்; 10. பிரதோஷ உற்சவம்; 11. பவித்தி ரோற்சவம் முதலியனவாம்.

**1.** விநாயகர் சதுர்த்தி விழா :—இது சில ஆலயங் களில், ஒரு நாளும் விநாயகர் ஆலயங்களில் துவஜா ரோகணத்துடன் கூடிப் பத்துநாளும் நிகழும்.

**2.** முருகப்பெருமான் கார்த்திகை, சஷ்டி விழாக்கள் :— பெரும்பாலும் ஒவ்வொரு நாள் மட்டும் நிகழும்; ஆண்டுதோறும் வரும் மகாஸ்கந்த சஷ்டி நாட்களில் 6 நாள் விழாவாகப் பல ஆலயங்களில் கொண்டாடப் பெறுகிறது.

**3.** தேவி ஆடிப்பூர விழா :—இவ்விழா எல்லா ஆல யங்களிலும் நான்கு புஜங்களுள்ள தேவிக்கு ஆடி மாதத்தில் வரும் பூரத்திற்கு முன் 9 நாட்களிலும் சிறப் பாகச் செய்யப் பெறுவதாகும். இம்மாதம் குளிர்கால மாதலால் மக்கள் நோயின்றி வாழ வகை செய்வதாக நிகழ்த்தப் பெறுவதாகும். இந்நாட்களில் தேவியைப் பூசித்து வழிபட்டுத் தோத்திரம் செய்து உயிர்கள் இன் புற வேண்டியதற்காக ஏற்பாடு செய்யப்பெற்ற விழா வாகும்.

**4.** தேவி நவராத்திரி விழா :—இது இருவகைப்படும்: ஒன்று புரட்டாசி மாதத்தில் வரும் அமாவாசை கழித்த 9 நாட்களில் தேவியைப் பிம்பத்திலும், கும்பத்திலும் எழுந்தருளச் செய்து 9 இராத்திரிகளில் வழி படுவதா தலால் இது நவராத்திரி என்றும், சில இடங்களில் பத்து இராத்திரிகளில் வழிபடுவதால் தசராத்திரி என்றும் அழைக்கப் பெறும். இந்நாட்களில் மக்கள் வீரத்தைப் பெறும் பொருட்டு முதல் மூன்று நாட்களில் பராசக்தியைத் துர்க்கையாகப் பாவித்துப் பூசிப்பார்கள். இனி அடுத்த மூன்று நாட்களில் செல்வத்தைப் பெறும் பொருட்டுத் தேவியை லக்ஷ்மியாகப் பாவித்துப் பூசிப்பர். கடைசி மூன்று நாட்களில் கல்வியைப் பெறு

வதற்காகத் தேவியைச் சரசுவதியாகப் பாவித்துப் பூசிப்பதும் மரபு. ஆதலால் இதற்குத் துர்க்கா லக்ஷ்மி சரசுவதி பூசை என்றும், மகா நவமி தேவி பூசை என்றும், சரசுவதி பூசை என்றும் பெயருண்டு. இந்த வகையான நவராத்திரி விழாவிற்குச் சாரதா நவ ராத்திரி என்று வழங்கி வருதல் பிரசித்தம். கடைசி நாளாகிய பத்தாவது நாளில் ஆண்டவன் குதிரை வாகனத்தில் எழுந்தருளி வந்து வன்னி மரத்தில் அம்பு தொடுத்தலான ஐதீகம், ஆன்மாக்களது மலங் களைப் போக்கிப் பக்குவப் படுத்துகிருன் என்பதை விளக்கு மென்பர் ஆன்ருேர்.

இந்த விரத நாட்களில் மக்கள் நாள்தோறும் விடியற்காலையில் எழுந்து நீராடி, நித்திய கடன்களை முடித்துக்கொண்டு விரத மிருந்து தேவியை விதிப்படிப் பூசித்து அம்பாளுக்குரிய அருள் நூல்களை ஓதி அவ ளருளைப் பெற்று இன்புறலாம். மேலும் இந்நாட்களில் கன்னிப்பெண்களைத் தேவியின் அம்சமாகப் பாவித்து அவர்களைப் பூசித்து அவர்களுக்கு உண்டி, உடை, ஆபரணம் முதலியன கொடுத்து உதவவேண்டும்.

இவ்விரதத்தை விதிப்படி அநுட்டித்துத்தான் ஸ்ரீராமபிரான் சீதையிருக்கும் இடத்தைத் தெரிந்து கொண்டான் என்று தேவி பாகவதம் கூறும்.

மற்ருெருவகையான நவராத்திரி: சித்திரைமாதத் தில் அமாவாசை கழித்து வரும் ஒன்பது நாட்களிலும் மக்களில் ஒருசாரார் தேவியை விதிப்படி எழுந்தருளச் செய்து பூசித்துப் பேறுபெறுவதும் வழக்கம். இதற்கு வசந்த நவராத்திரி என்று பெயர். இவ்விழாவினை வெகு சிலரே அநுட்டிப்பதால் இது பிரசித்தமாக விளங்காமலிருக்கிறது.

5. அன்னுபிஷேக விழா: இது ஐப்பசி மாதத்தில் வரும் பௌர்ணமி திதியன்று சிவலிங்கப் பெருமானை

விசேஷமாக அன்னத்தால் அபிஷேகஞ் செய்து, நிவே தனங்களுடன் வழிபட்டு வருகிறதைக் குறிக்கும்.

**6.** தெப்போற்சவம்: இது பெரிய திருக்குளங்கள் உள்ள சிவாலயங்களில் நடைபெறும். காஞ்சிபுரம், மதுரை முதலிய பெரிய தேவாலயங்களில் பிரசித்தமாக நடைபெறுகிறது. இவ்விழாவின் தத்துவம் ஆண்டவன் நீரில் வாழும் ஜீவராசிகளுக்கும் அருள்புரிவதற்காக இவ்விழாவை மேற்கொண்டுள்ளான் என்பர். பெரிய தெப்பங்கட்டி அதில் ஆண்டவனைச் சர்வ அலங்காரங் களுடன் எழுந்தருளச் செய்து அக்குளத்தில் மூன்று அல்லது ஐந்துமுறை வலம்வரச் செய்வார்கள். அப் போது மக்கள் இவ்விழாவினைக் கண்டு ஆண்டவனை வணங்கி மகிழ்வர்.

இனி, திருவள்ளுவர் திருக்குறளொன்றும் இதனைக் குறிப்பது என்பது ஆன்றோர் கொள்கை.

"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவனடி சேரா தார்"

**(இ - ள்)** இறைவனடி சேர்ந்தார் பிறவிப் பெருங் கடல் நீந்துவர் = இறைவனடி என்னும் புணையைச் சேர்ந்தார் பிறவியாகிய பெரிய கடலை நீந்துவர்; சேரா தார் நீந்தார் = அதனைச் சேராதார் நீந்தமாட்டாராய் அதனுள் அழுந்துவர் (எ - று).

**7.** வசந்தோற்சவம்: இது எல்லாச் சிவாலயங் களிலும் சித்திரை, வைகாசி மாதங்களாகிய கோடை காலத்தில் 3 நாள், 5 நாள், 10 நாள் வரை நடத்தப் பெறும். இதன் தத்துவம், மக்கள் தங்கள் வீடுகளில் வெயில் வெப்பம் தாங்காமல் வருந்தும் நேரத்தில் வெளியில் குளிர்ச்சியைத்தரும் நந்தவனம், தடாகக் கரை, ஆற்றோரம் முதலிய இடங்களுக்குச் சென்று வெயில் தணியும்வரை அங்கு தங்கியிருந்து பின் வீடு திரும்புவதைக் குறிக்கும். இதனுடன் மக்கள்

தாங்கள் சேரும் இடங்களுக்கு ஆண்டவனையும் அலங்கரித்து எழுந்தருளச் செய்து அங்கு பெருமானை அபிஷேகாதிகளால் மகிழ்வித்து குளிர்ந்த ததியோதனம் (தயிர் சாதம்) நிவேதனம் செய்து தாமும் உண்பது வழக்கம். இவ்விழா மக்கள் நன்மைக்காகவே அமைக்கப் பெற்றதாகும் என்னலாம்.

**8.** விடாய் ஆற்றி உற்சவம் : இது விடையாற்றி உற்சவம் என வழங்கப்பெற்று வருகிறது. உற்சவ காலங்களில் மக்களுக்கு ஏற்பட்ட விடாயை (சிரமத்தை) ஆற்றிக் கொள்ளும் பொருட்டுச் செய்யப் பெறுவது இவ்வுற்சவம்.

**9** மெத்தை உற்சவம் : சில கோயில்களில் பெருமானை அலங்கரித்து ஆலயத்தின் மெத்தையின்மீது எழுந்தருளச் செய்து வழிபாடுகள் நிகழ்த்தி வருவது மரபு. இதுவும் மக்கள் நலனுக்காகவே ஏற்பாடு செய்யப் பெற்றது.

**10.** பிரதோஷ உற்சவம் : இது வளர்பிறைத் திரயோதசி யன்றும், தேய்பிறைத் திரயோதசி யன்றும் கொண்டாடப் பெறும் உற்சவத்தைக் குறிப்பது. இதன் வரலாறு :—

முன்ஞெரு காலத்தில் தேவர்களும், அசுரர்களும் ஒன்றுகூடி மேருமலையை மத்தாகத் திருப்பாற்கடலில் நிறுவி, அதனைச் சுழற்றக் கயிருக வாசுகி என்ற பெரிய பாம்பைச் சுற்றிக் கடலைக் கடைந்தார்கள். எதற்காக ? அதனின்றும் அமுதத்தைப் பெற்றுத் தாங்கள் உண்டு சாகாமலிருப்பதற்காகத்தான். ஆனல் கடலைக் கடைந்த வேகத்தால் வாசுகி வலி தாளாமல் விஷத்தைக் கக்கியது. தேவர்களும், அசுரர்களும் பயந்து கயிலை மலைக்கு ஓடிச் சிவபெருமானிடம் சரணம் என்ருர்கள். இவர்களைத் துரத்திச் சென்ற விஷத்தைச் சிவபெருமான் உண்டு, அத்தேவர்களைக் காப்பாற்றினர். இது

மட்டுமா? தேவர்களை நோக்கி "நீங்கள் இன்னு மொருமுறை அக்கடலைக் கடையுங்கள். உங்களுக்கு அமுதம் கிடைக்கும்" என்றார். தேவர்களும் அவ்வாறே செய்தனர். பல விலையுயர்ந்த பொருள்கள் கிடைத்தன. அவற்றைத் தேவர்கள் விருப்பத்தோடு ஏற்றுக் கொண்டு மகிழ்ந்தார்கள். இது நிகழ்ந்த காலம் ஒரு ஏகாதசி இரவு. மேலும் அக்கடலைக் கடைந்தபோது மறுநாள் விடியற்காலையில் (துவாதசி) சுமார் 6 மணிக்கு அமுதம் தோன்றியது. அதனை எடுத்து அனைவரும் உண்டு மகிழ்ந்தனர். ஆடல் பாடல்களில் அந்நாளைப் போக்கினர். மறுநாள் திரயோதசியன்று சிவபெரு மானை நினைத்து அவர் இருப்பிடமாகிய கயிலை சென்று பெருமானை நோக்கித் தம்மை மன்னித்தருளுமாறு வேண்டினர். அன்புக்கிரங்கும் கருணைக்கடலான ஆண்டவனும் அவ்வாறே அவர்களை மன்னித்தருளி மாலை 4-30 மணிமுதல் 6 மணி வரையுள்ள நேரத்தில் (பிரதோஷ நேரம்) ரிஷபத்தின் இரு கொம்பின் மத்தி யில் இருந்து கொண்டு நடனஞ் செய்தார். தேவர்கள் தரிசித்துப் பேறு பெற்றனர்.

இவ்வுற்சவத்தைத் தவறாமல் தரிசித்தோர் மற்ற நாட்களில் ஆலய தரிசனம் செய்யாதுபோன பாவமும் நீங்கப் பெறுவர். இது உறுதி.

அவ்வுற்சவ காலத்தில் நந்தி தேவர் பக்கத்திலும், ஈசுவரன் சந்நிதியிலும் நெய்த்தீபம் வைக்கவேண்டும். நந்திக்குச் சிகப்பு அரிசி நிவேதனம் செய்விக்க வேண் டும். அறுகம்புல் மாலை சாத்த வேண்டும். சந்திர சேகாருக்கு விசேஷ அபிஷேகம் செய்து ரிஷபவாகனத் தில் அமர்த்தித் திருக்கோயிலுக்குள் பிரகாரத்தை மூன்றுமுறை வலஞ்செய்விக்க வேண்டும். ஒருமுறை சுவாமிக்கு முன்னே நாதசுர வாத்யமும், இரண்டாம் முறை வலம்வரும்போது வேதபாராயணமும், மூன்றும் முறை வலம் வரும்போது பன்னிரு திருமுறை பாராய

ணமும் செய்விக்க ஏற்பாடு செய்தல் வேண்டும். இவ்வுற்சவ காலத்தில், சுவாமி அபிஷேக ஜலம்விழும் நிர்மாலியத் தொட்டியைக் கடக்காமல் வலமாகவும், இடமாகவும் மாறி மாறிச் சிவாலயத்தை வலம்வருவது மரபு. அன்று பட்டினியிருப்பதும் நன்று.

இவ்விழாவும் நமது புதுவை தேவஸ்தானத்தில் மிகச் சிறப்பாகச் சென்ற ஓராண்டு காலமாக நடந்து வருவது போற்றத்தக்கது. ஒரு சிறு வரலாறும் (பிரதோஷ மகிமை) இவ்வாலயத்தாரால் வெளியிடப் பட்டுள்ளது காண்க.

11. பவித்ரோற்சவம்: (பெருஞ் சாந்தி உற்சவம்) சிலர் இதனைக் கும்பாபிஷேகம் என்பர். ஆனால் திருஞானசம்பந்தப் பெருமான் பாடியருளிய பூம்பா வைத் திருப்பதிகத்தில் திருமயிலையில் மாதந்தோறும் நடைபெறும் உற்சவங்களை வரிசையாகக் குறித்துள்ள படியால் இங்கு குறிக்கப்பட்ட "பெருஞ் சாந்தி" என் பது கும்பாபிஷேகத்தைக் குறிக்காமல், ஆவணி மாதத் தில் நடைபெறும் பவித்ரோற்சவத்தையே குறிக்கும் என்னலாம்.

இவ்விழா பெரும்பாலும் ஆவணி அவிட்டத்தின் போது நடத்தப்பெறும். இது இருவகை: ஒன்று நித்திய பவித்ரோற்சவம்; மற்றொன்று வருஷப் பவித்ரோற்சவம்; முன்னையது, நித்தியத்தில் ஏற் படும் தாழ்வுகளைப் போக்கிக்கொள்ளச் செய்யப்பெறுவ தாகும். தினந்தோறும் பூசை முடிவில் அறுகம்புல்லை அக்ஷதையுடனும் எள்ளுடனும் சேர்த்து மந்திரம் சொல்லிப் பெருமானுக்குச் சாத்துவது மரபு. மற் றொன்று ஆண்டுதோறும் செய்யப்பெறும் வருஷப் பிராயச்சித்த உற்சவமாகும். இதன் விளக்கம் சித்தாந்த சாராவளியில் பின்வருமாறு விளக்கப்பட் டுள்ளது காண்க.

[சரியாபாத வியாக்யானம்—5ம் ஸ்லோகம்]

"அர்க்கே யுக்மகதே ஹரிர் நிஜதி தௌசேதே" எனத் தொடங்கும் ஸ்லோகத்தின் தாற்பரியம்.

"திருமால் சயனித்தபின் பவித்ரபூசை யென்றத ஞல் அதற்குமுன் கூடாது என்ருயிற்று." (விசேஷக் குறிப்பு அநுபந்தத்தில் காண்க.)

ஆஷடாமாச சுக்லபக்ஷ துவாதசி விஷ்ணுவின் சயனகாலமென்று பிரசித்தமாயிருக்க, இங்கு எப்படி மிதுன சுக்ல துவாதசி சயனகாலமென்ற தென்னில்? மிதுனமென்பது ஸௌரமானத்தால் ஆனி மாசமாகும். அதில் சாந்திரமானத்தால் ஜேஷ்டமாசமும் ஆஷாட மாசமும் கலக்கும். ஜேஷ்டம் கலந்தது அதோ மிதுன மென்றும், ஆஷாடம் கலந்தது ஊர்த்துவமிதுன மென் றும் சொல்லப்பெறும். இவ்விடத்தில் ஊர்த்துவ மிதுனத்தைச் சொல்லியபடியால், அதுவே ஆஷாட மாகும். இந்தப்படி ஸௌரமானத்தால் மிதுன கடக சிம்ம மாசங்கள் (ஆடி, ஆவணி, புரட்டாசி) உடன் கலந்த ஆஷாட சிராவண, பாத்திரபத மாசங்கள் (ஆடி, ஆவணி, புரட்டாசி) மூன்றும் பவித்ரோற்ச வத்திற்கு முறையே உத்தமம், மத்திமம், அதமம் ஆகும் என்று தெரிவிக்கும் பொருட்டு மூன்று மாசங் களில் என்றது. கன்னியாமாசம் கூடாது. செய்தால் ப்ராயச்சித்தம் செய்து செய்யவேண்டும்.

திருமால் சயனத்திற்குப் பிறகே பவித்ரோற் சவம் விதித்தபடியால் அந்த திருமால் சயனகாலம் அதிகமாச மில்லாத வருஷத்தில் மிதுன மாசத்தோடு கலந்த ஆஷாட சுக்ல துவாதசியாகும். அதிக மாசம் வரும் வருஷத்தில் மிதுனஷாடத்தை விட்டுக் கடகா ஷாட சுக்லத் துவாதசி அல்லது கடக ச்ராவண சுக்லத் துவாதசியாகும் என்றறிக. அப்போது பூர்வத்தில் மலமாசமானபடியால் உத்தர மாசத்ல் பவித்ரோற்

சவம் செய்யவேண்டு மென்றவாறு. கடக மாசத்தில் நித்திரை செய்கின்ருர் என்றதனுல் சைத்ராதி ஆறு மாசங்களுக்குள்ளே, எந்த மாசத்தில் அதிகமாசம் வந்தபோதிலும் திருமால் சயனம் கடகமாசத்திலேயே என்று நிச்சயிக்கப்படும். மற்றும் இவ்விஷயத்திலுண்டாகிய விசேஷங்களை மூலக்ரந்தங்களில் கண்டுகொள்க.''

அடுத்து வரும் சுலோகங்களின் பொருள்களும் பின்வருமாறு :

''சிவலிங்க பூஜார்த்தமாக பருத்தியிலுண்டான ஒன்பது இழையுள்ள நூல் 108-ஆல் செய்யப்பட்ட ஆன்மபவித்ரம், வித்யாபவித்ரம், சிவபவித்ரம் என்னும் மூன்று பவித்ரமும் லிங்கத்தின் சிரசில் சரியான அளவுள்ளதாக விருக்கவேண்டும். இந்த தத்துவத்ரய பவித்ரங்களுக்கு ஆகம வசன ப்ரமாணப்படி 10, 9 முதலான கிரந்திகள் (முடிகள்) போடவேண்டும். மேல் நான்காவதான கங்காவதாரம் என்னும் பவித்ரமும் முன்போலவே நூற்றெட்டு நூலினுலே செய்யத்தக்கது. அதற்கு நூல் கணக்குக் கனுகுணமாக முடிபோட வேண்டியதாகும்.''

நூல் கணக்கு எப்படியென்னில், நவஹஸ்தம் முதல் ஏக ஹஸ்தம் வரையில் உத்தமோத்தமாதி பேதங்களாலே லிங்கம் ஒன்பது விதமாயிருக்கும். அவற்றுள் உத்தமோத்தமமாகிய நவஹஸ்த லிங்கத்தில் விதித்த சூத்திரக்கணக்கு நூற்றெட்டை அங்கிருந்து பத்துப் பத்தாகக் குறைத்துக்கொண்டு வருகையில் ஏக ஹஸ்தப்ரமாண லிங்கத்தில் சூத்திரக் கணக்கு இருபத்தெட்டாகும். அப்படியே கிரந்திக் கணக்கும் நவஹஸ்த லிங்கத்தில் ஐம்பதாக விதித்த கிரந்திக் கணக்கை அங்கிருந்து நான்கு நான்காகக் குறைத்துக்கொண்டு வருகையில் ஏகஹஸ்த லிங்கத்தில் கிரந்திகள் பதினெட்டாகும். இந்த சூத்திரக்

கணக்கும், கிரந்திக் கணக்கும், கங்காவதார பவித்திரத்திற்காகும் என்றறிக.

பாணலிங்கம், சுயம்புலிங்கம் முதலானவற்றிற்கு முன்னுத்தமாதி க்ரமமாகச் சொல்லப்பட்ட 108, 54, 27 சூத்திரங்களில் ஒருவிதத்தால் அல்லது 81 முதலாக விதித்த சூத்திரங்களில் ஒருவிதத்தாலாவது பவித்ராரோபணம் செய்யலா மென்னும் கருத்தை மேற்கொண்டு கூறுகின்ருர். எப்படி யென்னில் 108, 54, 27 சூத்திர பவித்ரங்களில் ஒருவித பவித்ரத்தினுலே பூசிக்கப்பட்ட பாண, சுயம்புலிங்க விஷயத்தில் 81 சூத்திரபவித்ரமாவது அல்லது 36 சூத்திரபவித்ரமாவது அல்லது 50 சூத்திரபவித்ரமாவது சமர்ப்பித்துப் பூசிக்கலாம். மேல், ஆன்ம வித்யா, சிவமென், னும் தத்வத்திரய பவித்ரத்தில் தசவித கிரந்திகளும் அதிதேவதைகள் ப்ரகிருதி முதலான சத்திகள் பத்துமாகும்: கிரந்திகள் ஒன்பது என்னும் பக்ஷத்தில் வாமாதி நவசக்திகளும் அதிதேவதைகள் ஆகுமென்றறிக. கங்காவதார பவித்ரத்தின் கிரந்திகள் 18-ல் மேலும் கீழுமிருக்கும் கிரந்திகள் இரண்டிற்கும் அதிதேவதை சிவனேடுகூடிய சத்தியாகும். அதில் மேலுக்குச் சிவனும் கீழுக்குச் சத்தியு மதிதேவதையாகும், என்றறிக. மற்றப் பதினுறு கிரந்திகளுக்கும் சந்திரகலைகள் 16-ம், பிராஸாத மந்திரகலைகள் 16-ம் அதிதேவதைகளாகும். ஒன்பதிழையாக மடித்திருக்கின்ற சூத்திரங்களின் நவதாதுக்களுக்கும், ப்ரணவம் முதலான, அதாவது ப்ரணவம், சந்திரன், அக்னி, பிரம்மா, நாகம், குஹர், ரவி,சாதாக்கிய, சர்வதேவர்கள் என்னும் இவ்வொன்பது பெயர்களும் அல்லது பிரம்மா, விஷ்ணு, ருத்திரர், ஈசுவரர், சதாசிவர், சோமன், சூர்யன், அக்னி, சர்வதேவர்கள் என்னும் இவ்வொன்பது பெயர்களுமாவது அதிதேவதைகளாவார்கள்.

பின்னும் கங்காவதார பவித்ரமாவது, பிரம்மாதி விஷயங்களில் முழந்தாள் வரையில் நீண்டிருக்க வேண்டும்.

பருத்தி நூலென்றது பருத்தி முதலான நூல் என்றறிக. கிருதயுகம் முதலான மூன்று யுகங்களிலும் முறையே பொன், வெள்ளி, செம்பு இவற்றினுள் செய்த பவித்ரமாகும். கலியுகத்தில் சக்தியானுசார மாகப் பருத்தி நூல் பவித்ரமும் செய்யலாம். அது த்விஜ கன்னிகை (பிராமண, க்ஷத்ரிய, வைசிய) நூற்ற தாயும், மும்மூன்று ஒன்பதாக மடித்ததாயும், சுத்த வெளுப்பாயும் அழகாயு மிருக்கவேண்டும்............... பட்டுநூல், மரவுரி, தாமரை நூல், வெண்பட்டுநூல், தர்ப்பம், சணல்நார், முஞ்சம்புல் முதலானவற்ருலும் பவித்ரம் செய்யலாம். அவற்றுள் பட்டு, வெண் பட்டு, சாதக விஷயம் ; தர்ப்பம் யதி விஷயம் ; முஞ்சம் புல் முதலானது தரித்திர விஷயமென்றும், த்விஜ என்றது விசேஷ ஸம்ஸ்காரமுள்ளவன். அவனில்லா விடில், த்ரைவர்ணிகன் என்றும், கன்னிகை யென்றது விதவை நீங்கலாக வென்றும் கொள்க.'' [இவற்றைச் சாத்தும் முறை, மந்திரங்களை உச்சரித்துச் செய்ய வேண்டிய முறைகளைச் சிவாசாரியர்கள்பால் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம்.]

''ஒரு ஸம்வத்சரத்தில் நாடோறும் செய்யும் பூசையில் மந்த்ர, திரவிய, கிரியாதிகளினுலேயும், ப்ரமோஹாதிகளினுலேயும் (மயக்கம்) காரிய கௌரவத் தாலும், ராஜசோர பயாதிகளினுலேயும், நேரிட்ட குறையைப் பூர்த்தி செய்யும் பொருட்டு நித்யாங்கமாக இந்த பவித்ரம் சமர்ப்பணம் செய்ய வேண்டும்........ ..............பின்னுமிந்தப் பவித்ரம் நாடோறும் செய்வது நைவசிகம் (நித்யம்) என்றும், வருஷந் தோறும் செய்வது வார்ஷிக மென்றும் இருவகையாம். இருவிதத்தில் ஒன்று மாத்திரம் செய்தால் அமை

யாதோ எனில், இது விசேஷகர்மமாகையால் நாள் தோறும் செய்ய முடியாது. சூத்திரத்திற்குப் பதிலாக புஷ்பதற்பாதிகளினுலே நாள் தோறும் பவித்ரம் செய்ய வேண்டும். அந்தக்குறை பூர்த்தியாக வருஷ பவித்ரமும் அவசியம் செய்ய வேண்டும். ஸந்தியா வந்தனுதி நித்ய கர்மலோபத்திற்கும் போல, பவித்ர லோபத்திற்கும் பிராயச்சித்தம் விதித்திருக்கிறது. தைவசிக மில்லாவிடில் வார்ஷிகமும் பிரதானமாக மாட்டாது. நித்யோற்சவத்திற்காகவே ஸம்வத்ஸ ரோற்சவம் போல, நித்ய பவித்ரத்திற்காகவே, ஸம் வத்ஸர பவித்ரமாதலால் இது நித்யாங்க மென்பதே சித்தம்.''

இப்பவித்ரோற்சவ காலத்தில் சுவாமிக்கு முன்னர் ஒரு தட்டில் சில பொருள்களை வைத்து அவற்றை மந்திர பூர்வமாக ஆண்டவனிடம் சமர்ப்பித்து உபசாரம் செய்வது எதற்காக என்ருல் கூறுதும் :

சிவனை அர்ச்சிக்கும் சிவாசாரியர்கள் நான்குமாத காலம் வரையில் வெளியில் செல்லாதிருக்க வேண்டு மென்பது மரபு. (இது சாதுர்மாஸ்ய விரதம் போல என்க) சிவாசாரியர்கள் தாங்கள் நான்கு மாதகாலம் வரை ஊரைவிட்டு வெளியே செல்லவில்லை என்று ஆண்டவனிடம் சங்கற்பம் செய்துகொள்ள வேண்டும். அக்காலத்தில் தங்களுக்குத் தினசரி உபயோகத் திற்காக வேண்டிய பொருள்களை ஆண்டவன் திருமுன் வைத்து மந்திர பூர்வமாக விண்ணப்பித்துக்கொண்டு அவற்றைத் தாம் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்.

அவையாவன :

(1) கத்தரிக்கோல், பல்குச்சி, நாக்கு வழிக்கும் கருவி, ஊசி, காதுகுரும்பி, நகம்வெட்டும் கருவி, ஆகிய பொருள்களை இறைவனுக்குக் கிழக்கே வைத்து எடுத்துக்கொள்ள வேண்டும்.

(2) கௌபீனம், துண்டு, தைலம், நெல்லி முள்ளி, மஞ்சள், பஞ்சகௌவியம், பஞ்சாமிர்தம், ஆகிய வற்றை இறைவனுக்குத் தெற்கில் வைத்து எடுத்துக் கொள்ள வேண்டும்.

(3) ஈக்ஷாஹாரம், ஈர்க்குளி, சீப்பு, மயிர் சிக்கெடுக்கும் கருவி, வஸ்திரம், உபவீதம், புஷ்பம், ஆபரணம், சந்தனம் ஆகியவற்றை இறைவனுக்கு மேற்கில் வைத்து எடுத்துக்கொள்ள வேண்டும்.

(4) ஒட்டியாணம், யோகபட்டம், பிக்ஷாபாத்திரம் கமண்டலம், வேணுதண்டம், சாமரம், குடை, கண்ணாடி, விபூதி, பாதுகை, மாத்திரைக்கோல், கத்தி, மான் தோல் ஆகியவற்றை இறைவனுக்கு வடக்கே வைத்து எடுத்துக்கொள்ள வேண்டும்.

[இவை சூக்ஷ்மாகமத்திலும், அம்சுமத் பேதத்திலும் கூறப்பட்டுள்ளன.]

(இவையன்றி, புற்றுபண்) மிருத்திகை, ஜலம், கோரோசனம், கஸ்தூரி, பச்சைகர்ப்பூரம், குங்குமப்பூ, மா, தர்ப்பை, எள், நெய், உருத்ராஷம், அரைஞாண், மைசிமிழ், தாம்பூலம், அன்னம், நெய், புலித்தோல் கட்டில் முதலிய பொருள்களும் பவித்ரோற்சவ விதியென்ற நூலில் கூறப்பட்டுள்ளன.)

குறிப்பு: சிவபூசை செய்யும் இல்லறத்தாரும், துறவிகளும் பவித்ரோற்சவத்தை யனுஷ்டிக்க வேண்டியிருப்பதால் மேலே கூறப்பட்ட பொருள்களுள் அவரவர்க்குரிய பொருள்களை அவரவர் கொள்ள வேண்டும்.

மேலும் இப்பவித்ரோற்சவத்தை நடத்திவைக்கும் சிவாசாரியார்களை அடுத்து யாககுண்டங்கள் அமைத்தல், கலசஸ்தாபனம், பரிவாரங்களை அமைத்தல், பூசிக்கும் முறை, மந்திரங்களின் விவரம் முதலியவற்றைத் தெரிந்துகொள்வார்களாக! வாழ்க சைவம்!!

நூல் முற்றிற்று.

## அநுபந்தம் I.

திருமால் சயனித்தபின் இப்பவித்திரோற்சவம் செய்ய வேண்டுமென்று விதித்தது எதற்காக என்னில் சிறிது விளக்குவாம்.

ஒவ்வொரு சிவாலயத்திலும் சிவபெருமானைப் பூசிப்போர் திருமால் முதலாக சிவாசாரியர்கள் ஈருக உள்ளதாலும், அவற்றுள் தேவர்கள் பூசையிலும் குறைவு ஏற்படலாம். மக்கள் செய்யும் பூசையிலும் குறைவு ஏற்படலாம். இவ்விரு குறைகளையும் போக்குவதற்காகவே வருஷ பவித்ரோற்சவத்தை விதித்துள்ளார்கள். தேவர்களுக்குள் தலையாய தேவரும், சிவபெருமானது முதலடியாராகவும் உள்ளவர் திருமால் ஆதலால், அவர் பூசையில் ஏற்பட்ட குறையையும் நாம் போக்க இப்பவித்ரோற்சவத்தைச் செய்வது அவர் பூசையிலும் குறை காண்பதாக இருக்கும் என்று அவர் திருமுன் செய்வது சரியல்ல என்றெண்ணியே இவ்வுற்சவத்தைத் திருமால் சயனித்த பின் செய்க என்று ஆகமம் விதித்தது என்பர் ஆன்ரோர்.

## அநுபந்தம் II.

"உத்ஸவம் என்பது (உத்+ஸவம்) உத்=சப்த பாஷிதம்; ஸவம்=சிருஷ்டி; அதாவது சிருஷ்டி மார்க்கத்தைக் குறிப்பது.

இவ்வுற்சவம் அறுவிதமும், வ்ருஷயாகாதி பக்தோத்சவாந்தம் பதினெண்கிரியையுமுடையது.

1. பைத்ருகம் = 12 நாள்;
2. சௌக்யம் = 9 நாள்;
3. ஸ்ரீகரம் = 7 நாள்;

4. பார்த்திவம் = 5 நாள்;
5. சாத்விகம் = 3 நாள்;
6. சைவம் = 1 நாள்;

இன்னும் பல விதங்களுமுண்டு. 18 கிரியைகள் முதலிய விவரங்களையும், அகோர சிவாசாரியார் இயற்றிய க்ரியாக்ரம ஜ்யோதி ஆரும்பாகம், மஹோற்சவ விதி என்னும் நூலில் காணலாம்.

சூக்ஷ்மாகமப்படி உத்ஸவ தினங்கட்குப் பலன்:

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1 | நாள்— | ராஜா விருத்தி; | 12 | நாள்= | முத்தி; |
| 3 | ,, | சிவத்தைச் சந்தோஷிப்பித்தல்; | 13 | ,, | சர்வசித்தி; |
| | | | 15 | ,, | ஜனங்கட்கு சுகம்; |
| 5 | ,, | போகம்; | 17 | ,, | புண்யப்ரதம்; |
| 7 | ,, | சிவப்ரியம்; | 19 | ,, | சர்வபாபஹரம்; |
| 9 | ,, | சாந்திகம்; | 21 | ,, | லோகரக்ஷை; |

காமிகாகமப்படிப் பலன்:

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1 | நாள்= | சிவப்ரீதி; | 13 | நாள்= | சாந்நித்யம்; |
| 3 | ,, | கிராமரக்ஷை; | 15 | ,, | நரருக்கு சௌக்யம்; |
| 5 | ,, | பூதரக்ஷை; | | | |
| 7 | ,, | கிரிஜாப்ரியம்; | 17 | ,, | ஜனங்கட்குப் புஷ்டி; |
| 9 | ,, | லோகரக்ஷை; | 19 | ,, | புபூக்ஷுகட்கு விருத்தி; |
| 11 | ,, | புக்தி; | | | |
| 12 | ,, | சுரருக்கும், சகலருக்கும் பிரீதி; | 21 | ,, | சர்வதேவர்கட்கும், பிரியம்; |

அயனம் முதலிய உற்சவபலன் :

அயனோற்சவங்கட்கு—புண்யபலம்;

மாசோற்சவங்கட்கு —ராஜதோஷ, மாசதோஷங்கள் நிவர்த்தி;

அமாவாசை = தாரா, புத்ராதி இஷ்டகாம்யசித்தியும், புண்யபலமும்;

பௌர்ணமி = சகலபாப நிவாரணம்.

இவ்வாறே 27 நக்ஷத்ரோற்சவங்களுக்கும் பலன் சொல்லப்பட்டுள்ளது.

இன்னும் உள்ள விவரங்களை முன்னர்க் கூறிய மஹோற்சவ விதி என்னும் நூலில் காண்க.

அநுபந்தம் |||

# திருவிழாக்களைக் குறித்தும் சில திருமுறைப் பாடல்கள்

திருஞானசம்பந்த சுவாமிகள்

திருஞானசம்பந்த சுவாமிகள்

## திருவிடைமருதூர்

பண்—தக்கராகம் 1-ங் திருமுறை

வாசங் கமழ்மா மலர்ச்சோ லையில்வண்டே
தேசம் புகுந்தீண் டியொர்செம் மையுடைத்தாய்ப்
பூசம் புகுந்தா டிப்பொலிந் தழகாய
ஈச னுறைகின் றவிடை மருதீதோ. 1

## திருமயிலாப்பூர்

பண்—சீகாமரம்   2-ந் திருமுறை

திருச்சிற்றம்பலம்

மைப்பயந்த வொண்கண் மடநல்லார் மாமயிலைக்
கைப்பயந்த நீற்றான் கபாலிச் சரமமர்ந்தான்
ஐப்பசி யோண விழாவு மருந்தவர்கள்
துய்ப்பனவுங் காணாதே போதியோ பூம்பாவாய். 2

வளைக்கை மடநல்லார் மாமயிலை வண்மறுகில்
துளக்கில் கபாலிச் சரத்தான்றொல் கார்த்திகை நாள்
தளத்தேந் திளமுலையார் தையலார் கொண்டாடும்
விளக்கீடு காணாதே போதியோ பூம்பாவாய். 3

ஊர்திரை வேலை யுலாவு முயர்மயிலைக்
கூர்தரு வேல்வல்லார் கொற்றங்கொள் சேரிதனில்
கார்தரு சோலைக் கபாலீச் சரமமர்ந்தான்
ஆதிரைநாள் காணாதே போதியோ பூம்பாவாய். 4

மைப்பூசு மொண்கண் மடநல்லார் மாமயிலைக்
கைப்பூசு நீற்றான் கபாலீச் சரமமர்ந்தான் [டும்
நெய்ப்பூசு மொண்புழுக்கல் நேரிழையார் கொண்டா
தைப்பூசங் காணாதே போதியோ பூம்பாவாய். 5

மடலார்ந்த தெங்கின் மயிலையார் மாசிக்
கடலாட்டுக் கண்டான் கபாலீச் சரமமர்ந்தான்
அடலானே றூரு மடிக ளடிபரவி
நடமாடல் காணாதே போதியோ பூம்பாவாய். 6

மலிவிழா வீதி மடநல்லார் மாமயிலைக்
கலிவிழாக் கண்டான் கபாலீச் சரமமர்ந்தான்
பலிவிழாப் பாடல்செய் பங்குனி யுத்திரநாள்
ஒலிவிழாக் காணாதே போதியோ பூம்பாவாய். 7

தண்ணா வரக்கன்றோள் சாய்த்துகந்த தாளினான்
கண்ணார் மயிலைக் கபாலீச் சரமமர்ந்தான்
பண்ணார் பதினெண் கணங்கள்தம் அட்டமி நாள்
கண்ணாரக் காணாதே போதியோ பூம்பாவாய். 8

நற்ரு மரைமலர்மேல் நான்முகனு நாரணனும்
உற்ருங் குணர்கிலா மூர்த்தி திருவடியைக்
கற்ரூர்களேத்துங் கபாலீச் சரமமர்ந்தான்
பொற்ருப்புக் காணுதே போதியோ பூம்பாவாய். 9

உரிஞ்சாய வாழ்க்கை அமணுடையைப் போர்க்கும்
இருஞ்சாக் கியர்களெடுத்துரைப்ப நாட்டில்
கருஞ்சோலை சூழ்ந்த கபாலீச் சரமமர்ந்தான்
பெருஞ்சாந்தி காணுதே போதியோ பூம்பாவாய். 10

திருச்சிற்றம்பலம்

## திருவிடைமருதூர்

பண்—காந்தாரம் 2-ங் திருமுறை

திருச்சிற்றம்பலம்

வருந்திய மாதவத்தோர் வானேரேனோர் வந்திண்டிப்
பொருந்திய தைப்பூச மாடியுலகம் பொலிவெய்தத்
திருந்திய நான்மறையோர் சீராலேத்த விடைமருதில்
பொருந்திய கோயிலே கோயிலாகப் புக்கீரே. 11

திருச்சிற்றம்பலம்

## திருநாவுக்கரசு சுவாமிகள்

திருவாரூர்—பண்—குறிஞ்சி 4-ங் திருமுறை

திருச்சிற்றம்பலம்

முத்துவிதான மணிப்பொற்கவரி முறையாலே
பத்தர்களோடு பாவையர்சூழப் பலிப்பின்னே
வித்தகக்கோல வெண்டலைமாலை விரதிகள்
அத்தனூரு ராதிரைநாளா லதுவண்ணம். 12

வீதிகள்தோறும் வெண்கொடியோடு விதானங்கள்
சோதிகள்விட்டுச் சுடர்மாமணிகள் ஒளிதோன்றச்
சாதிகளாய பவளமுமுத்துத் தாமங்கள்
ஆதியாரூ ராதிரைநாளா லதுவண்ணம். 13

திருவாரூர்—திருவிருத்தம் 4-ந் திருமுறை

ஆராய்ந் தடித்தொண்ட ராணிப்பொன் ஞரூரகத்
[தடக்கிப்
பாரூர் பரிப்பத்தம் பங்குனி யுத்திரம் பாற்படுத்தான்
ஆரூர் நறுமலர் நாத னடித்தொண்டன் நம்பிநந்தி
நீராற் றிருவிளக் கிட்டமை நீணுடறியுமன்றே. 14

## திருவிடைமருதூர்

திருக்குறுந்தொகை 5-ந் திருமுறை

பாச மொன்றில ராய்ப்பல பத்தர்கள்
வாச நாண்மலர் கொண்டடி வைகலும்
ஈச னெம்பெரு மானிடை மருதினில்
பூச நாம்புகு தும்புன லாடவே. 15

## திருப்பூந்துருத்தி

திருக்குறுந்தொகை 5-ந் திருமுறை

கொடிகொள் செல்வ விழாக்குண லையருக்
கடிகொள் பூம்பொழிற் கச்சியே கம்பனூர்
பொடிகள் பூசிய பூந்துருத் திந்நகர்
அடிகள் சேவடிக் கீழ்நா மிருப்பதே. 16

திருச்சிற்றம்பலம்

## திருவொற்றியூர்

திருத்தாண்டகம் 6-ந் திருமுறை

திருச்சிற்றம்பலம்

மத்தமா களியானை யுரிவை போர்த்து
வானகத்தார் தானகத்தா ராகி நின்று
பித்தர்தாம் போலங்கோர் பெருமை பேசிப்
பேதையரை யச்சுறுத்திப் பெயரக்கண்டு
பத்தர்கடாம் பலருடனே கூடிப் பாடிப்
பயின்றிருக்கு மூரேதோ பணியீ ரென்ன
ஒத்தமைந்த உத்திரநாள் தீர்த்தமாக
வொளிதிகழு மொற்றியூ ரென்கின் றூரே. 17

## திருத்தலையாலங்காடு

திருத்தாண்டகம் 6-ந்திருமுறை

தொண்டர்க்குத் தூநெறியாய் நின்றான் தன்னைச்
சூழ்நரகில் வீழாமே காப்பான் தன்னை
அண்டத்துக் கப்பாலைக் கப்பா லானை
ஆதிரைநா ளாதரித்த வம்மான் தன்னை
முண்டத்தின் முளைத்தெழுந்த தீயா னானை
மூவுருவத் தோருருவாய் முதலாய் நின்ற
தண்டத்திற் றலையாலங் காடன் தன்னைச்
சாராதே சாலநாட் போக்கி னேனே. 18

திருச்சிற்றம்பலம்

## சேந்தனார்

திருப்பல்லாண்டு 9-ந் திருமுறை

திருச்சிற்றம்பலம்

குழலொலி யாழொலி கூத்தொலி ஏத்தொலி
எங்கும் குழாம்பெருகி
விழவொலி விண்ணளவுஞ் சென்று
விம்மிகு திருவாரூரின்
மழவிடையார்க்கு வழிவழி யாளாய்
மணஞ்செய் குடிப்பிறந்த
பழவடியாரொடும் கூடியெம் மானுக்கே
பல்லாண்டு கூறுதுமே. 19

ஆரார் வந்தார் அமரர் குழாத்தின்
அணியுடை யாதிரைநாள்
நாராயணனொடு நான்முகனங்கி
இரவியு மிந்திரனும்
தேரார்வீதியில் தேவர் குழாங்கள்
திசையனைத்து நிறைந்து
பாரார் தொல்புகழ் பாடியுமாடியும்
பல்லாண்டு கூறுதுமே. 20

திருச்சிற்றம்பலம்

———

## ஓர் வேண்டுகோள் :

சிவாலயங்களில் எல்லாம் சிவாகமங்கள் விதித்துள்ள உற்சவங்களையும், பௌராணிக சம்பந்தமாக நடந்துவரும் உற்சவங்களையும், லௌகீகமாக நடந்து வரும் உற்சவங்களையும், உலக க்ஷேமத்திற்காக அவ்வவ்வாலயங்களின் அறங்காவலர்கள் பக்தி சிரத்தையுடன் நடத்திவைத்துத் தாம் இன்புறுவதல்லாமல் இவ்வுலகத்தையும் இன்புறச் செய்வார்களாக என வேண்டிக் கொள்ளுகின்றேன். வாழ்க சைவம்! வாழ்க தேவாலய அறங்காவலர்கள்!! வாழ்கசீ ரடியாரெல் லாம்!!!

### வாழ்த்து

திருச்சிற்றம்பலம்

வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயது எல்லாம் அரன் நாமமே
சூழ்க வையகமும் துயர் தீர்கவே.

திருச்சிற்றம்பலம்.

உ

## வாழ்த்து

ஆறிரு தடந்தோள் வாழ்க
அறுமுகம் வாழ்க வெற்பைக்
கூறுசெய் தனிவேல் வாழ்க
குக்குடம் வாழ்க செவ்வேள்
ஏறிய மஞ்ஞை வாழ்க
யானைதன் அணங்கும் வாழ்க
மாறிலா வள்ளி வாழ்க
வாழ்கசீ ரடியார் எல்லாம்.